22nd September 1958]

THE HON. SRI C. SUBRAMANIAM : A Statement [a] is placed on the table of the House.

SRI P. G. MANICKAM : ஸார், இவ்விதம் பிரிக்கப்படுகின்ற இலாக்காக்களை எல்லாம் ஈரோட்டிலேயே நிறுவப்போவதாகத் தெரிகிறது. அவ்விதம் செய்வதாக இருந்தால் கோவை ஜில்லாவை பிரிக்கின்ற சமயத்தில் பிரிக்கப்படுகிற ஜில்லாவுக்கு ஈரோடு ஜில்லா என்று வைப்பதற்கு அரசாங்கம் பரிசீலனை செய்யுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்போது பரிசீலனையில் இருக்கிறது. பிரிக்கப்படும் சமயத்தில் அதைப்பற்றி கவனித்துக்கொள்ளலாம்.

SRI K. RAMACHANDRAN : முக்கியமான ஜில்லாக்களை அதாவது இப்போது இருப்பதில் முக்கால்வாசி ஜில்லாக்களை இரண்டாகப் பிரிக்கப்போவதாக இந்த அசெம்பிளி கூடுவதற்கு முன்பாக பத்திரிகை குறிப்புகள் வெளிவந்தன. அது எப்போது நடைபெறும், அதற்கான திட்டம் உருவாகிவிட்டதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அது இப்போது பரிசீலனையில்தான் இருந்து வருகிறது.

*Training school*

* 398 *Q.*—SRI A. VEDARATHNAM : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether the Government have received any representation from the pupil teachers of Government Training School at Mohanur and if so, the contents thereof;

(*b*) the action taken by the Government thereon; and

(*c*) whether there is any proposal to convert the Training School into a Basic Training School?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir.

(*b*) The requests were similar to those answered in question No. 229, dated 7th March 1958. They were examined and it was found not possible to comply with the same.

(*c*) No, Sir.

SRI A. VEDARATHNAM : இந்த வருஷம் இருக்கின்ற பயிற்சிப் பள்ளிகளை எல்லாம் ஆதாரப் பள்ளிகளாக மாற்றுகின்ற அந்த ஜாபிதாவில் இந்தப் பள்ளி இல்லை. இன்னும் இந்த வருஷத்தில் எந்தெந்த பள்ளிகள் ஆதாரப் பள்ளிகளாக மாற்றப்படும் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இந்த ஜாபிதாவில் எட்டு பள்ளிகள் ஆதாரப்பள்ளிகளாக மாற்றப்படும். அந்த லிஸ்டு தற்போது என்னிடம் இல்லை.

*Drinking water-supply*

* 399 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) வேதாரண்யம் பஞ்சாயத்தைச் சேர்ந்த ஆறுகட்டித் தெருவிலிருக்கும் மீனவர் கிராமத்தார் குடி தண்ணீர் கோரி விண்ணப்பம் செய்திருக்கிறார்களா ?

---

[a] Printed as Appendix I on pages 484-486 infra.

[22nd September 1958

(ஆ) அது சம்பந்தமாக அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Yes, Sir.

(*b*) The Board of Revenue has been asked to take necessary action in the matter as the Board is competent to do so.

SRI A. VEDARATHNAM : 1955 நவம்பர் மாதம் அடித்த புயலில் இருபது அடிக்கு மேலாக கடல் தண்ணீர் கிராமத்திற்குள் புகுந்து குடி தண்ணீர் எல்லாம் உப்பாகி விட்டது. ஆகவே அங்குள்ளவர்களுக்கு உடனடியாக குடி தண்ணீர் வசதி செய்து கொடுக்க அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இப்போது அதற்காக ஒரு திட்டம் 30 ஆயிரம் ரூபாய் செலவில் அங்கு அமுல் செய்யவேண்டுமென்று கலெக்டர் அவர்கள் சிபாரிசு செய்திருக்கிறார். போர்டார் அதற்கு வேண்டிய முயற்சி எடுத்துக்கொண்டிருக்கிறார்கள்.

*Peruvalai and Ayyan channels*

* 400 *Q.*—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) whether any representations were received in 1957–58 from the ayacutdars of Peruvalai and Ayyan channels in Tiruchirappalli district that they were not getting enough supply of water for irrigation;

(*b*) whether the non-requirements of water in the Tanjore area prevented the Government from letting into the Cauvery at Mettur heads the quantity of water that will be required to give a good supply to the Ayyan and Peruvalai channels, and

(*c*) the action by the Government to ensure continuous and good supply of water in these channels?

THE HON. SRI P. KAKKAN : (*a*) Yes.

(*b*) The non-requirement of water for Tanjore area generally arises during heavy rainfall days in the monsoon months and in these days the issue for this area is curtailed at Mettur to economise water. However, a minimum of four to five thousand cusecs is allowed at Mettur even then and this will facilitate half to three-fourth supplies for the Ayyan, Peruvalai and other channels. The curtailment would be only for a couple of days and would not materially affect the condition of crops.

(*c*) Continuous supplies are always allowed. But for allowing good supplies, some measures have been taken by extending the existing groyne. The further measures to be taken would depend upon the results of the groyne, which are being watched for a few seasons.

SRI S. LAZAR : மான்ஸூன் காலத்தில் தஞ்சாவூர் பக்கம் அதிகமாக மழை பெய்யக்கூடும். ஆனால் அவ்விதம் திருச்சியில் பெய்வதில்லை. அந்த சந்தர்ப்பத்தில் அய்யன் பெருவாலை சானலில் 4,000 கன அடி தண்ணீர் விடுவது மிகக் கஷ்டமாக இருக்கிறது. இந்த நிலையில்